(**உரை**) வித்தையோடு ஈசர் சாதாக்கியம் சத்தி சிவங்கள் ஐந்தும் சுத்த தத்துவம் - சுத்த வித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்று சொல்லப்பட்ட ஐந்தும் சுத்த மாயையில் தோற்றப் பட்ட தத்துவங்கள்; சிவன் தன் சுதந்தரவடிவமாகும் - சிவன் தானே சுத்த மாயையிலே உதிப்பித்து அதிலே அனுப்பிரவிஷ்டமாம் விக்கிரகம்; நித்தமென் றுரைப்பர் காலம் நீங்கிய நிலைமையாலே - காலாதீதனான சிவனுக்கு அதிஷ்டேய ஸ்தானமான து கொண்டும், அசுத்தமாயா காலத்தினால் அபரிச்சேதமாகையாலும், நித்தமென்றும் சொல்லுவார்கள்; வைத்திலர் முற்பிற்பாடு வருவித்தார் கருமத் தாலே - இந்தப் பஞ்ச தத்துவங்களுக்கும் கிருத்திய பேதமாதி முற் பிற்பாடு அல்லது வஸ்துத முற்பிற்பாடு இல்லை.

*தத் உக்தம் தத்வப்ரகாஶே—பஞ்சா நாமப்யேஷாங் நஹிக்ர மோஸ்தீஹ கால ரஹிதத்வாத் வ்யாபாரவஶாதேஷாம் விஹிதா வஹு கல்பநா ஶாஸ்த்ர ।—இதி*

சிவதத்துவம் சத்திதத்துவம் இரண்டும் சிவனுக்கும் சத்திக் கும் அதிஷ்டேய'ஸ் தானமாயிருக்கும்; சாதாக்கியதத்துவம் சதா சிவத்துக்கு அதிஷ்டேயஸ்தானமா யிருக்கும்; ஈசுவரதத்துவம் மகேசுவரனுக்கு அதிஷ்டேயஸ்தானமா யிருக்கும்; சுத்தவித்தை உருத்திரதேவருக்கு அதிஷ்டேயஸ் தானமா யிருக்கும். சுசு

மேல் கர்த்தா அனேக மூர்த்திகளைத் தரித்தும், ‡ சிதேக ரூபமான தன்மை பிறழான் என்பதுணர்த்துகின்றது. [‡ சிதேகரூபம் - ஞானம் என்ற ஒரே ரூபம்.]

ஒருவனே இராவணாதி பாவகம் உற்றாற் போலத்
தருவன் இவ் வுருவ மெல்லாம் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும். 87

(**உரை**) ஒருவனே... திரியானாகும் - கூத்தாடி யொருவனே இராவணாதிகளைப் போல ரூபத்தையும் அபிநயத்தையும் பிறருக்குக் காட்டித் தான் தன்னுடைய சொரூபத்தைக் கெடாது நின்றது போல, கர்த்தாவும் இங்கனம் சொல்லப்பட்ட பஞ்ச கிருத்தியத்திற் காக இப்படி அனேக விக்கிரகங்களை அதிஷ்டித்துக் கொண்டிருந்து கிருத்தியங்களைப் பண்ணியும், அகண்டாகார சச்சிதானந்த சொரூபம் மாறுபாடாகான். அஃது எவ்வாறென்னில்; வரும் வடிவெல்லாம்... இயைந்து நிற்கும் - இங்கனம் வரப்பட்ட திருமேனி யெல்லாம் சிற்சக் தியே. அந்தச் சத்தியானது மரமும் வயிரமும் போலப் பிரிக்கப் படாததாய்ச் சிவத்துடனே பொருந்தி நிற்கும்

மேல் இதுவுமதுவென் றுணர்த்துகின்றது.

பொன்மை நீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோல் சத்தி தன் பேத மெல்லாம்
நின்மலன் தானாய்த் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையான் அன்றே. 88

(**உரை**) பொன்மை நீலாதி வன்னம்... நிற்குமாபோல் - பொன்மையாதி வன்னங்களாலாகிய ஒரு வஸ்து சுத்த ஸ்படிகத்திலே சம்பந்தித்த பொழுது, அந்த ஸ்படிகமும் அந்த நிறமாகவே பார்ப் போருக்குத் தோன்றி நின்றாற்போல; சத்தி தன் பேத மெல்லாம்... விற்பன் - சத்திகள் பேதமாகிய விக்கிரகங்களெல்லாம் தானேயாய்க் காண்பித்தும் பேதமன்றித் தான் ஒரு தன்மையாயே நிற்பன், அந்தச் சத்தியாதோ எனின்; முன்னருட் சத்தி தன்பால் முகிழ்க்கும் தான் முளையான் அன்றே - அந்தக் கர்த்தாவினிடத்திலே முதலே கிருபையாகிய பராசத்தி உதித்து, அனேக பேத சத்திகளாம். தான் ஒன்றிலும் உதியா தவனாகி, அனாதியே சர்வகாரணத்திற்கும் பரம காரணனாகி நின்றான்.

தத் உக்தம் ரத்தத்ரயே, § [§ இரத்தினத் திரயம் என்ற இந்த வடநூலைச் சிவஞான சுவாமி களும் குறிப்பிடுகிறார் (சித்தியார் 59 உரை).]

தத் உக்தம் ரத்நத்ரயே[1]—

பராபேக்ஷாரூபம் யத்விஜ்ஞாநம் ஶிவஸம்ஜ்ஞிதம் ।
தஸ்யஶக்திஃ பராபேக்ஷா ரூபமாஹுர் விபஶ்சிதஃ ||

ஆகாரஶ்ஶிவஸம்வித்தே ரஶேஷஸ்யாபி வஸ்துந |ஃ
பராநபேக்ஷாஹ்யாம் அஸ்,ஶக்திஸ் ஶிவாஶ்ரயா || சூ அ

மேல் சத்தி சிவமே பிரபஞ்சத்திற்குப் பரம காரணமென் றுணர்த்துகின்றது.

சத்தியுஞ் சிவமு மாய தன்மை இவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியு மாக
வைத்தனன் அவளால் வந்த ஆக்கம் இவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார். 89

(**உரை**) சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலக மெல்லாம் - சத்தியும் சிவமும் பொருந்தி நின்றமையினாலே இந்த உலகங்களெல் லாம் உண்டாயின. பொருந்திநின்ற முறைமை எவ்வாறென்னில்; ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் - சைதன்னிய சொரூபமானது ஒத்திருக்க, விக்கிரகங்கள் ஈசுவரனென்றும் ஈசுவரியென்றும் புருஷ ரூபமும் ஸ்திரீரூபமுமாகப் பேதமாம். ஆகில், பேதம் ஏனென்னில்; உணர் குண குணியுமாக வைத்தனன் - விக்கிரகங்களன்றிச் சத்தராய்

நின்ற பொழுது, சத்தி குணமும் சத்தன் குணியுமாய் நின்று, அவ் வாறே வஸ்துக்களெல்லாம் குணகுணிகளாகவே உண்டாக்கி நிறுத்தினான்; அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம் - ஆன் மாக்களுக்குத் தனு கரண புவன போகம் இவைகளெல்லாம் அந்தச் சத்தியாலே உண்டாக்கப்பட்டதே; இத்தையும் அறியார் - நிரீசு வரவாதிகளாயிருக்கிற பேர்கள் அதை யறியாமல் † அந்யதாவாகச் சொல்வார்கள். அப்படிச் சத்தி சிவங்கள் உண்டாகக் கண்டதில்லை. இவ்விடத்து ஸ்திரீ புருஷ சம்யோகத்தினால் தானே பிரஜோற்பத்திகள் உண்டாகக் கண்டோ மென்று பிரத்தியட்சவாதிகள் சொல் வில், அப்படி ஸ்திரீ புருஷ சம்யோகத்தினாலே உண்டாகிறதும் அந்தச் சத்தி சிவங்கள் நின்ற முறைமையினாலே, அஃது எவ்வா றென்னில்; பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார் - சிவன் நாதரூப லிங்கமாகவும், சத்தி இந்த ரூபமான பீடமாகவும், யோனியும் லிங்கமுமாக, சம்பந்தத்தினாலே சகல பிரஜோற்பத்திகளை உண்டாக்குகிறதும் அறியார்கள். [† அந்யதாவாக - வேறாக.]

தத் உக்தம் வாதுளே

தத் உக்தம் வாதுளே—

நாதோலிங்க மிதிஜ்ஞேயம் பிந்து: பீடமிதிஸ்ம்ருதம்।
நாதபிந்து யுதம்ரூபம் கர்மஸாதாக்ய முச்யதே॥

லிங்கம்ஶம்பு ரிதிஜ்ஞேயம் பீடம்ஶக்தி ருதாஹ்ருதம்।
யோநிலிங்க ப்ரகாரேண ஜகத்ஸ்ருஷ்ட் யர்த்தகாரணம்॥

ததாஸம்யோக ரூபத்வாத் கர்மரூப முதாஹ்ருதம்।
லிங்கேப்ய: ஜாயதேதத்ர ஜகத்ஸ்தாவர ஜங்கமம்॥

தஸ்மாத்லிங்கம் விஶேஷேண கர்மரூப முதாஹ்ருதம்।—இதி.

## பதியின் சிறப்பிலக்கணம்

முதல் விருத்தத்திலே † சித்துருவென்று உபக்கிரமித்து, ‡ மத்யே அறுபத்தெட்டு விருத்தம் § பராமர்சம் பண்ணி, மேல் அந்தப் பராமர் சத்திலே வந்த ரூபம், அரூபம், ரூபாரூபம், குணம், கிரியை இவைக ளெல்லாம் உபசாரமல்லது இயல்பல்ல, கேவல சுத்தசைதன்னிய மாத்திரமே சிவசொரூபம், தத் $ சன்னிதி மாத்திரத்திலே பஞ்ச கிருத்திய முண்டாவதென்று உபசம்மாரம் £ பண்ணுகின்றது.

[ † முதல் விருத்தம் - முதல் சூத்திரத்தின் முதல் விருத்தம் (21); ‡ மத்யே - மத்தியிலே. அறுபத்தெட்டு விருத்தம் - 22 முதல் 89 வரையிலுள்ள விருத்தங்கள்.; § பராமர்சம் - ஆராய்ச்சி.; $ தத் - அதனுடைய.; £ உபசம்மாரம் - முடிவு செய்தல்.]

சிவன்உரு அருவும் அல்லன் சித்தினோ டசித்தும் அல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானும் அல்லன்
தவமுதல் யோக போகந் தரிப்பவன் அல்லன் தானே
இவைபெற இசைந்தும் ஒன்றும் இசைந்திடா இயல்பினானே. **90**

(**உரை**) சிவன் உரு அல்லன் - அனந்தேசுவர சீகண்ட பரமேசுவர காலருத்திர விஷ்ணு பிரும்மாதி மூர்த்திகளைத் தனது † சமவாய சத்தித் துவாரா அதிஷ்டித்து நின்றுகொண்டு, சிவன் உரூபியுமல்லன்; அருவும் அல்லன் - சுத்தாவத்தையிலே ‡ அகளை யாகிய சிற்சத்தி மூர்த்திமானாக நின்றதுகொண்டு, சிவன் அரூபிய மல்லன்: சித்தினோடு அசித்தும் அல்லன் - சித்தாகிய ஈசுவர சமவாய சத்தியானது தத்துவமும் அசித்தாகிய விந்து மூர்த்தியுமாகிக் கூடின விடத்திலே பிரபாவரூபமான பஞ்சமந்திரதனு வென்றது கொண்டு. சிதசித்தாத்மகமான ரூபாரூபியுமல்லன்; பவமுதல் காம் பண்ணிடுவானும் அல்லன் - பிரும்மா விஷ்ணு தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானும் அல்லன் - பி. சேவா சதாசிவரிடங்களிலே வேற்ற § அபிவியக்தியாக உருத்திர மகேசுவர சதாசிவரிடங்களிலே நின்றும், அவர்கள் பண்ணும் சிருஷ்டி ஸ்திதி சம்மார திரோபாவ அனுக்கிரகமாகிய கிரியைகளைப் பண்ணினவனுமல்லன் : தவ முதல் யோகம் தரிப்பவன் அல்லன் - தவமாகிய $ அணிமாதி அஷ்டாங்க யோகசாதனையை முனிகள் பொருட்டுத் தான் செய்துகாட்டிய டே பரமேசுவரனை வேற்ற நின்றும், அந்தச் சாத்துவிக குணத்தையுடையவனுமல்லன்; போகம் தரிப்பவன் அல்லன் - உமாமகேசுவரனை வேற்றநின்றும், அந்த இராசத குணத்தையுடைய மைல்லன். சம்மாரத்தைப் பண்ணும் காலருத்திரனை வேற்ற நின் றும், அந்தத் தாமச குணத்தையுடையவனு மல்லன். அகில கரோதீதி கர்த்தா' என்னும் £ வியுத்பத்தியால், கர்த்தாவென்பது சிவனுக்கு எப்படிக் கூடும் என்னில்; தானே இவைபெற இசைந்தும் ஒன்றும் இசைந்திடா இயல்பினானே - தனது சன்னிதி மாத்திரத் திலேதானே ஆன்மாக்களுடைய போக மோக்ஷார்த்தமான சிருஷ் டியாதி பஞ்ச கிருத்தியங்களும் பொருந்தும், தொழில் குணம் இச்சை வெறுப்பு விகாரம் ஒன்று மல்லாத சுத்த சைதன்னிய சொரூபமே சுபாவமாக உடையவன்.

[† சமவாய சத்தி - நீக்கமின்றி நிற்கும் சத்தி.; ‡ அகளை - கிஷ்களை.; § அபிவியக்தியாக நின்று. வெளிப்பட்டு நின்று.; $ அணிமாதி. அணிமா முதலான அட்டமாசித்திகள்; அஷ்டாங்கயோகம் - இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம் தாரணை, தியா னம், சமாதி என்னும் எட்டு.; £ அகிலத்தையும் செய்கின்றமையினாலே கர்த்தா. வியுத்பத்தி - சொற்பொருட் காரணம்.]

தத் உக்தம் தேவீகாலோத்தரே—

விஜ்ஞப்தி மாத்ரோஹி ஸதார்த்யஸூநு
ஸர்வத்ர யஸ்மாத் ஸததம் விமுக்த:|
நாதேய ஹேயோப் யஹம் ப்ரத்யாஸ்
திஷ்டன் ஸதா ஸூக்ஷ்ம மயோ விமோக:||

சிவனுக்கு ஆதாரதேக் கரணாதிகளெல்லாம் தனது சமவாய் : சத்தி யென்பதற்குச் சம்மதி:

ஸ்ரீமத் மதங்கே—

அபூபத்யுரயிஜ்ஞாநா ஸ்வஶக்தி கரணாத்மகம்।
காஷ்டாஸைவ பராஸூக்ஷ்மா ஸர்வஜிக்காம்ருதாத்மிகா ॥

வ்ருக்ஷஸ்தாவரணா ஶாந்த வஸ்தமாத்ராதி லாலஸா।
ஆத்ருந்தோ பரதாஸாயீவீ மூர்த்தித்வே நோபசர்யத ॥—இதி.

இந்த முதற் சூத்திரம் எழுபது விருத்தத்தினால், பிரபஞ்சம் ஆண் பெண் அலியாதி காரிய ரூபமாகையினாலே, இந்தக் காரியத் துக்குக் கர்த்தா வொருவன் உண்டென்றும், தாம் அதைக் கண்ட பொழுது, புகையைக் கண்டபொழுது இதற்குக் காரணமா யிருக்கிற ஈரவிறகோடே கூடின அக்கினி யுண்டென்று அறிந்தது போல, இதற்குக் காரணமா யிருக்கிற † ஆத்ரேந்தா ஸம்யுக்தாஸ்தியுண்டென்று அறிந்து, அதுபோலச் சிதசித்து ரூபமா யிருக்கிற பிரபஞ்சத்தைக் கொண்டு இதற்குக் காரணமாக ஆன்மா ஆச்ரயமா யிருக்கிற மாயையிலே ஈசுவர சத்தி சம்பந்த முண்டென்றும், இப்படிப்பட்ட சத்தியாகிற தர்மத்துக்கு தர்மியாக ஈசுவரனுண்டென்றும், ஆன்மாக்கள் பண்ணுகிற புண்ணிய பாவங்களாகிய காரணத்தினாலே மேல் சுகதுக்கங்களாகிய காரிய முண்டாம், ஆகமத்தினாலே அந்தச் சுகதுக்கானுபவமாகிய சொர்க்க நரகமுண்டென்றும் அறிவித்தது.
[† இங்கே விறகினுடைய சம்பந்தம் இருக்கிறது.]

ஸாத்ரிகிர்டிஶஸ் ஸமுத்மத்வாத் அங்யாப்ஸ்வநீயயேதி।

மேலும், இந்த விசுவமானது மாயையாகிற உபாதானத்திலே நின்றும் ஒரு கர்த்தாவினாலே உண்டாக வேண்டும், [*21]மிருத் பிண்ட மானது கடாதிகளாகிறதற்குக் குலாலனை அபேக்ஷிக்குமாபோல.

தத் உக்தம் பௌஷ்கரே -

கோப் யஸ்யவிதம் விஶ்வம் கார்யம் ஸ்யாத் ஹஸ்மஹாவத:।
யதா குலால ஸாபேக்ஷா ம்ருத்பித்யேஷாங்வயீ புநரிதி ॥—இதி. ௭௦

முதற்சூத்திர உரைச் சிறப்புப்பாயிரம்

புண்ணியன் சிவாக்ர யோகி புகழ்சிவ ஞான சித்தி
நண்ணுழ தற்சூத் ரத்தின் நலந்தரு பொருளை யாய்ந்து
திண்ணிய உலகிற் கேது திட்டாந்த பூர்வ மாக
அண்ணலாம் அரன்கர்த் தாவென் றறிந்திட உரைசெய் தானே.

**ஸ்ரீமத் அதிவர்ணாசார்யவர்ய சைவ பரிபாலக**
**சிவாக்கிர யோகியர் பண்ணின**
**சிவஞான சித்தியார் முதற் சூத்திர வியாக்கியானம்**
**சமாப்தம்.**

## இரண்டாஞ் சூத்திரம் - அத்துவித இலக்கணம்

மேல், சிவன் தம்முடைய சமவாய சத்தியாலே பிரபஞ்சோற் பத்தியைப் பண்ணுவரென்பதும், சிவ சீவர்களுடைய அபேதபாவமும், பாசத்திரயமாகிய ஆணவம் மாயை காமியங்களினுடைய லக்ஷணங்களையும், தத்துவதாத்துவிகங்களினுடைய லக்ஷணங்களையும் கூறுகின்றது.

உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து செல்லத்
கலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவு சீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும். 91

(**உரை**) இதற்குச் சிவஞானபோத மூலசூத்திரானுகுணமாக அன்வையம்: இவ்விடத்தில் சிவன் வேறாய் உடனுமாய் அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் உலகெலாமாகி அமர்ந்து செல்லத் தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்தல் இன்றித் தானே நிலவு சீர் அமலனாகி ஒளியாய் ஓங்கி நீங்காதெங்கும் நின்றனன்.

ஸமல நிர்மலதையினாலே சிவனும், உலகெலாம் ஆன்மாக்களும் பேதமுமாய், வியாப்தியினாலும் சித்ரூபதையினாலும் பேதமற்றதுமாய், எண்ணிறந்த ஆன்மாக்களுடைய கன்மானுகுணமாகத் தனது சமவேதசத்தியினால் மாயையை க்ஷோபிப்பித்துத் தனுகரணாதிகளைச் சமவாய சத்தியானுசூதமாக † உண்டாக்கி, ஸ்திதி காலமெல்லாம் பிரபஞ்சத்திருந்து பிரளயகாலத்திலே ஒடுங்கும்படிக்குத்தான் தடஸ்க கர்த்தாவுமாய், இவ்வாறு இந்தப் பிரபஞ்சத்துடனே பிறிவற நின்று ஆன்மாக்களுடைய கர்த்திருத்துவ போக்திருவாதிகளும் மாயையினுடைய சங்கோச விகாசங்களுமாய், காரியங்களுடைய உற்பத்தி ஸ்திதி நாசங்களும் தனக்கின்றி, அனாதியே ஸ்வபாவமாக அழகு பெற்ற நிர்மலனாகி, ஸ்வப்பிரகாசனாகி, காலதேச வஸ்துக்களினாலே அபரிச்சின்னனாகி நீக்கமற்றெங்கும் நின்றனன்.
[† அனுசூதமாக - விடாது தொடர்ந்திருப்பதாக.]

தத்உக்தம் ஶிவஜ்ஞானபோதே :—

[1]அந்யஸ்ஸந் வ்யாப்தி தோநந்ய: கர்தா கர்மானுஸாரத:|
கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸா மாஜ்ஞயா ஸமவேதயா ||—இதி.

[[1] இது வடமொழிச் சிவஞானபோத இரண்டாஞ் சூத்திரம். சாக்ஷாத்கார ரூபஞானத்தால் வேறில்லாதவரான கர்த்தா, அவன் அவள் அது என்பதற்கு வேறாயிருந்துகொண்டு, பிரிவில்லாமலிருக் கிற, ஆக்ஞா சக்தியினாலே, அவரவர் செய்த வினைக்கீடாக ஆன்மாக் களுக்குச் சுகதுக்காதி வியாபாரத்தைச் செய்கிறார் என்பது இதன் பதப்பொருள்.]

இதற்கு **மெய்கண்டதேவ சிவாசாரியார்** சொன்ன உதாரணம்:

“அரக்கொடு சேர்த்தி அணைத்த அக் கற்போல்
உருக்கி யுடங்கியைந்து நின்றும் - பிரிப்பின்றித்
தானே உலகாந் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று." (9)

மேல் பதப்பொருள்: வேறாய் - அனாதியே சிவனும் ஆன்மாவும் உபாதியினாலே பேதமுமாய்; உடனாய் - சொரூப வியாப்தியினாலே பேதமற்றதுமாய்; அலகிலா உயிர்கள் கன்மத்து - எண்ணிறந்த ஆன்மாக்களுடைய கர்மானு குணமாக; ஆணையின் - தனது சமவாய சத்தியினாலே; உலகெலாமாகி - எல்லா உலகங்களுமாய்; அமர்ந்து - நிலைபெற்று நின்று; செல்ல - லயத்தையடைய; தலைவனாய் - கர்த்தாவாய்;

எல்லா உலகங்களையும் உண்டாக்கி ஸ்தாபித்து அழிக்கக் கர்த்தாவென்று கூறாது, எல்லா உலகங்களுமாய் நின்று ஒடுங்க வென்று பிரபஞ்சத்தையே கர்த்தாவாகச் சொன்னது, சிவனுடைய கார்யோன்முகியாயிருக்கிற சத்தி சம்யோகத்தினாலே பிரபஞ்சம் காரியப்பட்டு நின்றும் அழியும். அதற்குச் சிவன் தடஸ்தன் என்பதனால்;

தானே நிலவு சீர் அமலனாகி - அந்த அனந்தேசுவராதிகள் சிவனால் அமலரானது போலச் சிவனும் ஒருவரால் நிர்மலனாகாமல் அனாதியே ஸ்வபாவ நிர்மலன் என்றது; ஒளியாய் - ஸ்வயம் பிரகாச மாயிருக்கை; ஓங்கி -பிறரைப் பிரகாசிப்பிக்கை.

ஈசுவரனுடைய சமவாயசத்தி பிரபஞ்சானுசூதையாய், அபின்னையாயிருக்கையினாலும், ஈசுவர நிமித்தமாயிருந்தும் சத்சத்திமானங்கள் அபின்னமாகையாலே பிரபஞ்சம் ஈசுவரனை அபின்ன நிமித்தோபாதானமாகவுடையது. ஈசுவரன் நிமித்த காரணமென்றும் சுத்தாசுத்த மாயைகள் உபாதானமென்றும் சொல்லியிருக்க, இவ்விடத்தில் அபின்ன

நிமித்தோபாதான மென்றது விரோதமென்னில், இது விரோதமில்லை. புத்திரனுடைய தேகத்திலே மாமிசாதிகளுக்கு மாதாவினுடைய சோணிதம் உபாகானமும், அஸ்திக்குப் பிதாவினுடைய வீரியம் உபாதானமும், ஆதா னத்திலே பிதாகர்த்தாவுமாயிருக்க, உபாதானதையைக் கூறாமல் பிதாவை நிமித்தனென்றது போல, சகத்துக்கு ஈசுவரனை உபாதான மென்னாது, பிரதானமான கர்த்திருத்துவத்தினாலே நிமித்தனென் றது. சடமாகிய மாயையும் சித்தாகிய ஈசுவர சத்தியும் மிளிதமான படியினாலே, பிரபஞ்ச சித்சிதாகாரமாய் நின்றதென அறிக;

இவற்றின் தன்மை தனக்கெய்தல் இன்றி - இவ்வாறு இந்தப் பிரபஞ்சத்துடனே பிறிவற நின்று ஆன்மாக்களுடைய சுதந்தரமுடைத் தாயிருக்கையும் மாயையினுடைய சங்கோச விரிவுகளும் மாயா காரியங்களுடைய உற்பத்தி திதி நாசங்களும் தனக்கு இன்றி நீங்காது எங்கும் நின்றனன் - நீக்கமற எவ்விடத்தும் சடசித்து நீக்கதோறும் நின்றனன்.

தத் உக்தம் தேவிகாலோத்தரே -

தத் உக்தம் தேவிகாலோத்தரே—

[1]பூதாநி சாஹம் ஸ்திர ஜங்கமாநி
யாவந்தி சாந்யாந் யஹமேவதாநி—இதி ॥

பூஜாஸ்தவே ச - விஸ்வாத்மகம் ஸததம் அநந்த மீஸம் - இதி॥

---

[1 தாவரமாயும் சங்கமமாயுமுள்ளவை யனைத்தும் நானே, இவற் றுக்கு அன்னியமா யுள்ளவை யனைத்தும் நானே என்பது பொருள்: இவ்வாறு ஈசன் தேவிக்கு உபதேசம் செய்கிறான்.]

தேவாரத்திலும் “எல்லா உலகமும் ஆனாய் நீயே” (6. 3 78.) என்றும், "இருநிலனாய்" (6. 94. 1) என்றும், திருவாசகத்திலும் “வானாகி" (19) என்றும், “நினைப்பற நினைந்தேன் நீயலாற் பிறிது மற்றின்மை" (394) என்றும் வருவன காண்க.

இவ்வாறு ஆகம புராணங்களிலும் தேவார திருவாசகங்களிலும் வெகுவாகச் சம்மதியுண்டு.

சிவனும் ஆன்மாக்களும் வஸ்துபேதமுமாய் வியாப்தியினாலே அபேதமும் என்றதனால், சம்பந்தம், சமவாயமோ சம்யோக சம வாயமோ என்னில், அது சிற்சத்தியேயாம்.

சம்யோகமென்னில், அந்தச் சம்யோகம் ஜன்யமோ அஜன்யமோ? ஜன்யமாகில், அன்யதாகர்மஜன்யமோ, உபயகர்ம ஜன்யமோ, ஸம்யோக ஜன்யமோ? இருவரும், சித்தும் விபுவுமாகையால், அன்ய தாகர்ம ஜன்யமும் உபயகர்ம ஜன்யமும் கூடாது; ஆகையால், சம்யோக ஜன்யமா யிருக்கிற சம்யோகத்திற்கும் உற்பத்தியில்லை. ஆகையால், அஜன்ய சம்யோகத்திற்கு நித்தியவிகாரித் துவம் வருமென்னில், வாராது.

வியாப்தியானது, வைஷயிக வியாப்தி யென்றும் ஔபச்லே ஷிக வியாப்தி யென்றும் இருவகை. அதிலே, **வைஷயிகவியாப்தி**யானது, கடாதி சர்வமூர்த்தத் திரவியங்களையும் ஆகாசம் வியாபித் திருக்கை. **ஔபச்லேஷிகவியாப்தி**யானது, பாலில் நெய் போலவும், பழத்தில் மதுரம் போலவும், எள்ளில் எண்ணெய் போலவும், † அரணியில் அக்கினி போலவும் இருக்கை.

[† அரணி - தீக்கடைகின்ற கோல்; " அரணி கான்ற அணிகிளர் செந்தீ": பெருங்கதை.]

இவ்விடத்து ஆன்மாவுஞ் சிவனும் சைதன்யமும் விபுவுமாகை யால், வியாப்பிய வியாபக பாவம் ஔபச்லேஷிகமே. இது அனாதி யும் நித்தியமுமாகையால், இதனால் விகாரித்துவமில்லை. இந்தச் சம்பந்தம் சிவனென்றும் சீவனென்றும் பேதஞ் சொல்லவும் பெற்றுப் பிரிக்கப்படாமலு மிருக்கையினாலே, தாதாம்யமென்று வியவகரிக்கப்படும். இவற்றின் விஸ்தாரம் ‡ சித்தாந்த நீர்ணயத்தில் நிரூபித்தோம்; கண்டுகொள்க.

[‡ **சித்தாந்த நிர்ணயம்** என்பது சிவாக்கிர யோகிகள் செய்த நூலென்று கருதலாம். இதைக்குறித்து வேறெந்த விவரமும் தெரிய வில்லை.]

இந்த விருத்தம் மேல் தொண்ணூற்றைந்து விருத்தத்திற்கும் மூல சூத்திரமாகையால், இதற்குப் பதப்பிரயோசனம் கூறவேண்டும். அவை வருமாறு:

உலகெலாமாகி: பிரபஞ்சம் வஸ்துவாகி புற்பத்தியுள்ள தல்ல, பிராந்தி என்னும் விவர்த்தவாத நிராசார்த்தமாக; வேறாய் : சிவாத்து வைத நிராசார்த்தமாக; உடனுமாய்: சிவனுக்கும் சீவனுக்கும் அந்யத்ர பேதஞ்சொல்லும் நியாயவைசேடிகாதி நிராசார்த்தமாக : ஒளியாயோங்கி : ஸ்வபரப்பிரகாச சொரூபனென்றது; இது, கர்த்தா குணவானும் ஸாவயவமும் என்னும் பாஞ்சராத்ர பாகவதாதி கிராசார்த்தகமாக; அலகிலா உயிர்கள் : ஏகான்மவாத நிராசார்த்தமாக; கன்மத்து: லோகாயதமத நிராசார்த்தமாகவும் நைக்ரச்ய வைஷம்ய தோஷ நிராசார்த்தமாகவும்; ஆணையின் : மாயாசத்தி யல்லது சிவனுக்குச் சமவாயசத்தி யில்லையென்னும் பாட்ட பஸ்கர மத நிராசார்த்தமாக; அமர்ந்து: சகத்துக்கு உற்பத்தியுண்டு, ஸ்தாயியல்ல, க்ஷணத்திலே நாசமென்று சொல்லும் பௌத்தமத நிராசார்த்தமாக; செல்லத் தலைவனாய் : சகத்துக்கு நாசமில்லை, ஆன்மாக்களுடைய கர்மத்தினாலே தேகேந்திரியாதிகளுண்டாவ தொழிந்து, இதையுண்டாக்குவானொரு கர்த்தாவுமில்லை என்னும் மீமாம்சகமத நிராசார்த்தமாக. § சேஷபதப் பிரயோசனம் முதலே சொல்லப்பட்டது.

[§ சேஷபதப் பிரயோசனம் - மற்றச் சொற்களின் கருத்து.]

அலகிலா உயிர்கள்... உடனுமாய் நின்றனன்' என்பதற்கு ஏகான்மவாதி பண்ணுஞ் சங்கையை அனுவதித்துத் தூஷிக்கின்றது.

ஒன்றென மறைக ளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி
நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவ தென்னை என்னின்
அன்றவை பதிதானொன்றென் றறையுமக் கரங்கள் தோறும்
சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே. 92

**(உரை)** ஒன்றென மறைகளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவதென்னை என்னில் - வேதங்களிலே ஆன்மாக்கள் ஏகமேயென்று சொல்லுகையினாலே, அனேக ஆன்மாக்களிடங்களிலும் சிவனொருவனே பிறிவற நின்றா னென்றும், ஆன்மாக்களை அனேகமாகக் கூறியதென்னையோ வெனில்; அன்றவை பதிதான் ஒன்றென்று அறையும் - வேதங்கள் ஒன்றென்று சொன்னது சீவான்மாக்களையன்று, பின்னையே தென்னில், சீவான்மாக்களுக்குப் பதியாகிய பரமான்மாவையே ஒன் றென்று சொல்லும். ஆகில், சீவான்மாவும் பரமான்மாவும் பேதமாயிற்று. இது வேதத்தில் அத்வைதமென்ற வாக்கியத்திற்கு விரோத மென்னில், விரோதம் வாராது. பிரசித்தத்துக்கன்றே † பிரதிஷேத முள்ளுவது. ஆகையால், சீவான்மாவும் பரவான்மாவும் வஸ்துவினாலே பேதமும், வியாப்தியினாலே அபேதமுமாகையால் அத்வைத மென்றது. அஃதெவ்வாறென்னில்; அக்கரங்கள் தோறும் சொன்றிடும் அகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே - நாற்பத்தொன்பது அக்கரங்கள் தோறும் அகரம் செறிந்து உயிராய் நின்றதுபோல, அனேக சீவான்மாக்கள்தோறுஞ் சிவன் பிறிவறச் செறிந்து பரமான் மாவாக நின்றான். [† பிரதிஷேதம் - விலக்கு.]

மெய்யெழுத்து முப்பத்துநாலிலும் அகாரம் பிராணனாக நின்றதொக்கும், உயிரெழுத்துக்களிலே அகாரம் பிராணனாக நின்ற தெவ்வாறென்னில், அகாரம் பிரகிருதியாய் நிற்க, ஆகாராதி பதினைந்தெழுத்தும் விகிருதியாய் நின்றது. இதனுடைய லக்ஷணம் அளவை ‡ பதின்மூன்றாம் விருத்தத்திலே ஆகம நிரூபணத்தில் வர்ணோற்பத்தியிலே சொன்னோம்; கண்டுகொள்க.
[‡ அனாதியே அமலனாய'என்ற திருவிருத்தம் (19).]

இது பொழிப்புரை.

மேல் அகலம் வருமாறு:

அனேக ஆன்மாக்களுண்டென்கிறது எதனாலே அறியப்படும்? பிரத்தியக்ஷத்தினாலும் அனுமானத்தினாலுமல்லவோ என்னில், பிரத்தி யக்ஷத்தினாலும் அனுமானத்தினாலும் ஆகமத்தினாலும் அனேகாத்ம சித்தம்.

அதெப்படியென்னில், "பிரத்தியேக மஹமஸ்திய" என்கிறபடி, பிரத்தியக்ஷமுண்டாகையினாலே பிரத்தியக்ஷம், மேலும் ஜனன மரணங்களைப் பேதமாகக் காண்கையினாலே ஆன்மாக்கள். அனேகமே.

அஃதன்று, ஜன்மநாசங்கள் தேகத்திற்கொழிந்து ஆன்மாவுக் கில்லையென்னில், அப்படியல்ல; ஆன்மாவுக்கே லிங்க சரீரத்துடனே கூடி ஜனனமரணமுங் காணப்படுகிறது. அன்னமயமாயிருக்கிற ஸ்தூலசரீர லிங்கசரீரத்தினுடைய காரியமாகிய தாத்துவிகம், இந்த ஸ்தூல சரீரத்திற்கே அநித்தியதை. லிங்க சரீரம் ஆன்மாவுடனே § ஸஹசாரியாய், கர்ப்பத்திலே பதிகிறபொழுதும் கூடப் பதிந்தும், ஸ்தூல தேகத்தை விட்டுப் போகிறபொழுதும் கூடப் போயும், மோக்ஷ பரியந்தமும் அனுவதிக்கையினாலே, ஆன்மாவிற்கும் லிங்க சரீரத்திற்கும் கூடவே ஜனன மரணாதிகள் சொல்லப்படும்.
[§ ஸஹசாரியாய் - உடன் செல்வதாய்.]

லிங்க சரீரியாயிருக்கிற ஆன்மாவிற்கு ஜனனமில்லை, ஸ்தூல சரீரத்திற்கே ஜனனமென்னில், அந்தத்தேகத்திற்குச் சைதன்யமில்லாமற் போகவேணும், அப்போது பிறந்த குழந்தைக்கும் அந்தத் தேகத்திலே $ சைதன்னிய முண்டாகையினாலே, சைதன்னியத்தோடேயே லிங்க சரீரத்திற்கு உற்பத்தி. ஜன்மாதி பேதங்களையுடைய இந்த லிங்க சரீரமே ஆன்ம பேதத்திற்கு ஹேது. [$ சைதன்யம் - அறிவு.]

நித்தியனாயிருக்கிற ஆன்மாவிற்கு உற்பத்தி நாசம் எப்படிக் கூடுமென்னில், ஸ்தூல சரீரேந்திரியாதிகளுக்குச் சமவாயி காரணமாய் ஆமோக்ஷ நித்தியமாயிருக்கிற லிங்க சரீரத்திற்கு உற்பத்தி நாசங்களை அங்கீகரிக்கையினால் ததவஸ்சின்னனா யிருக்கிற ஆன்மாவிற்கு உற்பத்திநாசம் அங்கீகார்த்தமே.

அப்படியல்ல, லிங்கசரீரமும் அமோக்ஷ ஸ்தாயியல்ல, அசத்தே யென்னில், அத்யந்தம் சத்தானது £ ககன குசுமம்போல உண்டாகாது, எப்பொழுதும் சத்தானது நாசத்தையடையாது. ஆகையால், லிங்கசரீரம் ஆமோக்ஷஸ்தாயி யாகையினாலே சத்து, மோக்ஷந்தா பாயியாகையினாலே அசத்துமான படியாலே, சதசத்தாம்; ஆகையால், லிங்கசரீரத்திற்கு உற்பத்தி நாசமுண்டு; ததவஸ்சின்னமாயிருக்கிற ஆன்மாவிற்கும் அவ்வாறே. இப்படிப் பிரதி ஆன்ம நியதமாக லிங்க. சரீரமும் ஜனன மரணமும் உண்டாயிருக்கையினாலே, ஏகான்மவாதம் கற்பிக்கிறது அறிவீனமே.
[£ ககன குசுமம் - ஆகாசத் தாமரை.]

அஃதல்ல, மாயா விலாசமான லிங்கசரீரங்கள் அனேகமாகிலும், கும்ப கலசோதகஞ்சநாதிக்யநேகங்களிலே யிருந்தும் ஆகாச மொன்றே யானதுபோல, ஆன்மாவொன்றே அனேக சரீரங்களிலுமிருக்கும் என்னில், இந்தத் திருஷ்டாந்தம் கூடாது. கும்பகல சாதிகளிலே யிருக்கிற ஆகாசம் ஏக ரூபமாயே யிருக்கும்; அனேக லிங்க சரீரங்களிலே இருக்கிற சைதன்னியம் அப்படியல்ல. ஒரு காலத்திலேதானே, ஒரு தேகிக்குப் போஜனேச்சையும், ஒரு வனுக்கு வழிநடக்கிறதிலே இச்சையும், ஒருவனுக்கு நித்திரையிலே இச்சையும், ஒருவனுக்கு அஞ்ஞானமும், ஒருவனுக்கு

ஞானமும், ஒருவனுக்கு வைராக்கியமும், ஒருவனுக்கு விஷயாசக்தியுமாகக் காண்கையால், ஒருவனுக்கு ஏககாலத்திலே † விருத்த நானாகிருத்தியம் கூடாது. ஆகையால் ஆன்மா அனேகமென்று சித்தம்.
[† ஒன்றுக்கொன்று விரோதமான பலவகைக் கிருத்தியங்கள்.]

ஆகாசம் ஒன்றாயிருக்க, கலச கும்பாதி பேதங்களினாலே, பேத மானது போல, ஆன்மா ஒருத்தனுக்கே லிங்க சரீராதி பேதத்தினாலே பேதமென்னில், அது கூடாது, திருஷ்டாந்தமாயிருக்கிற ஆகாச மொன்றாகையினாலே, அதனுடைய பேதம் உபாதி பேதத்தினாலே உண்டாயிற்றென்று சொல்லலாம், இவ்விடத்து, ஆன்ம பேதம் யுக்திகளினாலே சித்தமாயிருக்கையினாலே, பேதாசித்தியை அங்கீகரிக்கிறது சோபையல்ல, மேலும், ‡ க்ஷித்தியாதி காரியங்களுக்கு ஈசுவரன் கர்த்தா. அந்த ஈசுவரன் விபுவும் நித்திய திருப்தனு மாகையால், க்ஷித்யாதிப் பிரபஞ்சத்தைத் தன்னுடைய போகார்த்த மாக உண்டாக்கின தல்ல.
[‡ க்ஷிதி - பூமி]

அந்தப் பிருதிவியாதிகளுக்கு ஒன்றுக்கொன்று போகமாக உண்டாக்கினார் என்னில், அவை சடமாகையினால் போக்கியமா மொழிந்து போக்தாவாகாது. ஈசுவரன் சர்வஞ்ஞராகையால், கிரர்த்தமாக உண்டாக்கார். இந்தப் பாரிசேஷத்தினாலே, ஈசுவரனுக்கும் பிரபஞ்சத்திற்கும் அன்னியமாக போகாயத்னமான சரீராதிகளை யறிகிறவர்களான பசுக்களென்று சித்தம்,

பிரபஞ்ச சத்பாவத்திலே பிரமாண முண்டாயேயல்லவா, இந்தப் பிரபஞ்சம் ஆன்மாக்களுடைய போகார்த்தமாகவேணும், பிரபஞ்ச சத்பாவத்திலே பிரமாணமேயில்லை என்னில், பிரத்தியக்ஷமாகக் காணப்பட்ட பிரபஞ்சத்திற்குப் பிரமாணமேன்? அஃதன்றும் பைத்யோத்ரேக ப்ரமத்திலே சூரியகிரணத்தினாலே நானாவிதமாயிருக்கிற வெயிற்குஞ்சுகள் காண்பித்தது போல, அஞ்ஞான வசத்தினாலே தீர்க்கப் பிரமையாகக் காண்பித்ததே. இவ்வாறு பிரச்சியக்ஷப் பிரமாணமில்லாதபொழுதே பிரத்தியக்ஷத்தை ஹேதுவாயுடைய அனுமானமும் பிரமாணமல்ல; பிரத்தியக்ஷானுமானங்களுக்கு விருத்தமான ஆகமமும் பிரமாணமல்ல.

அப்படியேன்? பிரத்தியக்ஷாதிப் பிரமாணமுண்டு. அஃதெவ்வா றென்னில், கோடித்வயசமான தர்மதரிசனத்தினாலே ஸ்தாணுவோ புருஷனோவென்று சந்தேகிக்கில், இந்தச் சந்தேகத்திற்கு விஷயமாயிருக்கின்ற ஸ்தாணு புருஷர்களைச் சத்தியமாக அறிகையினாலே, பிரபஞ்ச சத்பாவத்திலே பிரத்தியக்ஷப் பிரமாணமுண்டாகையால், பிரத்தியக்ஷத்தை ஹேதுவாகவுடைய அனுமானமும் உபய சம்மதமான ஆகமமும் பிரமாணம்.

அந்தப் பிரத்தியக்ஷமும் ரஜ்ஜு சர்ப்பாதி போலும், சுத்தி ரஜிதப்பிராந்தி போலும், மருமரீசிப்பிராந்தி போலும், பிரபஞ்சப் பிராந்தியல்லது பிரமாண ஞானமல்ல.

அஃதன்று; அந்த † ரஜ்ஜுவிற்குச் சர்வசாம்ய முண்டாகையாலும், பிராந்தி வியதிரிக்த ஸ்தலத்திலே யதாவத்தாகச் சர்ப்பத்தையறிய வுண்டாகையாலும், ‡ ஆரோப்பியமான சர்ப்பமும் அதிஷ்டானமான ரஜ்ஜுவும் சத்திய ரூபமாக அறியப்படுகையினாலும், ஆரோப்பியமான பிரபஞ்சமும் அதிஷ்டானமான பிரும்மமும் இவையிரண்டும் சித்தமே. சுத்தி ரஜிதம் § போலப் பிராந்தி யென்பதுவுங் கூடாது, சுத்தியிலே ஆரோபிதமான ரஜிதத்தை ஸ்தலாந்தரத்திலே யதார்த்தமாகக் காணாதபொழுது இந்தப் பிராந்தி கூடாததுபோல, பிரபஞ் சத்தையும் யதாவத்தாகக் காணாதபொழுது பிரும்மத்திலே பிரபஞ்சப் பிராந்தி கூடாது.

மருமரீசிகா திருஷ்டாந்தமும் பூமியும் சூரிய $ மரீசியும் சத்திய ஜலமும் மூன்று வஸ்து உளதானது போல, மாயையும் ஈசுவர சத்தியும் பிரபஞ்சமும் சித்தி, மேலும், பிரபஞ்ச பாவசாதகப் பிரமாணம், பிரமாணமோ அப்பிரமாணமோ, நீயே விசாரித்துப்பார்.

---

[† ரஜ்ஜு - பழுதை.; ‡ ஆரோபித்தல் - ஒன்றின் தன்மையை மற்றொன்றுக்கு ஏற்றிச் சொல்லுதல்.; § இரஜிதம் - வெள்ளி.; $ மரீசி - கிரணம்.]

---

பிரபஞ்ச பாவசாதகம் பிரமாணமென்னில், அந்தப் பிரமாணம் பிரபஞ்சகோடி நிவிஷ்டமாகையால், பிரபஞ்சைக தேசாங்கீகாரத்தினாலே பிரபஞ்சம் சித்தம். பிரபஞ்ச பாவசாதகம் அப்பிரமாணமென்னில், ‘ பிரபஞ்ச பாவசாதக ப்ரமாண பாவாத்சு தாரம் பிரபஞ்ச சித்திஹி'; ஆகையால், ஆன்மா நானாத்வமும், அசத்தாகிய மாயா காரியப் பிரபஞ்சம் வஸ்துவாத்மகமுமாம். இவ்விருவகைக்கும் சம்மதி வசனங்கள் **சிவாக்கிர பாஷ்ய**த்திலே எழுதினேம், கண்டு கொள்க.

சிவனுக்கு ஆன்மாக்கள் பின்னமாகையால், ஞேயமாக வேணும்; ஞேயமானபொழுதே பரிச்சின்னமும் விநாசியமும். இத னால், சிவன் ஆன்மாக்களை யறிவானென்னில், சர்வஞ்ஞத்வஹானி வரும். இந்த இரண்டிற்கும் அவிரோதமானவுண்மை குருமுகத்தினா லறியப்படும்

சிவசீவர்களுடைய அத்துவைதத்திற்கு உதாரணம்.

உருவொடு கருவி யெல்லாம் உயிர்கொடு நின்று வேறாய்
வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன்
தருமுயிர் அவனை யாகா உயிரவை தானும் ஆகான்
வருபவன் இவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே. 93

(**உரை**) வருபவன் ஈசன் - ஏககாலத்தும் எவ்விடத்தும் ஆன்மாக்களைப் பிறிவறக்கூடி வருபவனான ஈசுவரன்; வேறுமாய் மன்னி நின்றே - ஆன்மாக்களுடைய கர்த்திருத்துவ போக்திருத்துவாதிகளுக்கு அன்னியமாக ஆன்மாக்களிலே நிலைபெற்று நின்றே கன்மானுகுணமான சுகதுக்க போகங்களைப் புசிப்பிப்பன்; உயிர்களின் மருவி இவை தானாயும் வாழ்வன் - முக்தான்மாக்களை

வேற்றக் கலந்து சீவஸ்வரூபம் தோன்றாமல் தானேயாக வாழ்வன். சீவான் மாக்கள் தாம் மலம் நீங்கிச் சிவனாவர்கள் என்ன ஆகாதோ என்னில்; தரும் உயிர் அவனையாகா சிவனாற் பிரகாசிப்பிக்கப்பட்ட அறிவையுடைய ஆன்மா சிவனை வியாபியாது. அதென்போல வென்னில்; உருவொடு கருவியெல்லாம் உயிர்கொடு நின்று வேலர் வருவது உயிரவை தானும் ஆகாபோல - தேகேந்திரியாந்தக்கரணங் களை ஆன்மா தானாக அபிமானம் பண்ணிக்கொண்டு நின்று, அதற்கு அன்னியமாய் வருவது, அவ்வாறு கூடிநின்ற காலத்தும் தேகேந்திரி யாதிகள் ஆன்மா ஆகாதது போல.

இவை தானாயும் வேறுமாய் என்ற இரண்டும்மையும் சிவன் சீவான்மாக்களுமல்ல, அவைகளுக்கு அன்னியமுமல்ல, தாதான்மியமே, என்றது. இருவர் கூடிவாழ்தல் இன்புறு புணர்ச்சி என்றி தன் பொருள்.

மேல் மாறிப் பிறந்து வருமாறுணர்த்துகின்றது.

இருவினை யின்ப துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவதாகும் மன்னிய வினைப்பயன்கள்
தருமரன் தரணியோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்மபலன்களும் மறுமைக் கண்ணே. 94

(**உரை**) இவ்வுயிர் இருவினை இன்பதுன்பத்துப் பிறந்து வருவதும் இறந்து போவதும் ஆகும் - புண்ணிய பாவத்தின் பலமாகிய சுகத்தையும் துக்கத்தையும் புசிப்பதாக பூமியிலே வந்து பிறப்பதும் சொர்க்கத்திலே புண்ணிய பலமே புசிப்பதாகவும் நரகத்திலே பாவபலமே புசிப்பதாகவும் இறந்து போவதுமாம்; மன்னிய வினைப்பயன்கள் தரும் அரன் - இவ்வாறு பொருந்திய புண்ணிய பாவ பலன்களை அரனே கொடுப்பான். எவ்வாறென்னில்; தரணியோடு தராபதி போல - பூமியானது விகாரமின்றி நின்று அவரவர் பண்ணின † கர்ஷணாதிகளுக்கு ஏற்ற பலத்தைக் கொடுக்கிறது போலக் கர்ம பலன்களை யுண்டாக்கி, பூபதியானவன் அவ்வவர் பண்ணின கிருஷியாதி பலன்களை அவ்வவர்க்கேயாகச் செலுத்துமாப்போல, அவ்வவர் பண்ணின கர்ம பலத்தை அவ்வவரையே புசிக்கப் பண்ணுவன். கர்ம பலத்தைக் கொடுக்குமல்லது, கர்மானுகுணமாக மாயையே பலத்தைக் கொடுக்கும், இதற்கொரு கர்த்தா ஏனென்னில்; தானே மருவிடா வடிவம் கன்ம பலன்களும் மறுமைக் கண்ணே - மாயை சடமாகையால், தானே உருவாக அறியாது, கன்மமானது செய்த வுடனே நாசமாகையால் அந்தக் கன்மத்திலே ஒரு அதிருஷ் டதைச் செனிப்பித்து, அதை ‡ அத்வநிஷ்டபம் பண்ணி மறுமைக் கண்ணே பலன் கொடுப்பதாகையால், கருமந்தானே பலன் கொடுக்க மாட்டாது. ஆகையால், ஈசுவரனே கரும பலத்தைக் கொடுக்க வேண்டும்.

[† கர்ஷணாதி - உழவு முதலிய செயல்.; ‡ அத்வநிஷ்டபம் - வழியிலிருப்பது.]

இவ்வுயிரென்பது சகலரென அறிக.

மேல் லோகாயதன் புண்ணிய பாவங்களென்பதொன்றுமில்லை, சுகதுக்கங்கள் தேகத்துக்குச்சுபாவம் என்பதைப் பன்னிரண்டு விருத்தத்தினாலே அனுவதித்து நிராகரிக்கின்றது.

இருவினை யென்னை இன்பத் துன்பங்கள் இயல்ப தென்னின்
ஒருதன்மை இயல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி.
வருவதென் மலருந் தீயும் மருவலின் வாசம் வெம்மை
தருவதென் நீரென் செய்து தானியல் பாகும் அன்றே. 95.

(**உரை**) இருவினை என்னை இன்பத் துன்பங்கள் இயல்பதென்னில் - புண்ணிய பாவங்களென்று இரண்டுண்டென்று சொல்லு வானேன், சுகதுக்கங்கள் சுபாவமே யென்னில்; ஒரு தன்மை இயல் பக்தள்ள தொருவனுக்கு இரண்டு செய்தி வருவதென் - சுபாவமான தொரு பகுப்பா யிருப்பதன்றி, ஒருவனுக்குச் சுகமும் துக்கமும் இரண்டு வகையா யிருப்பதேனென்னில்; மலருந் தீயும் மருவலின் வாசம் வெம்மை தருவதென் நீர் என் செய்து தான் இயல்பாகும் அன்றே - புஷ்பமானது பொருந்தின பொழுது வாசனையையும் அக்கினி பொருந்தினபொழுது உஷ்ணத்தையும் உண்டாக்குகிற நீரானது என்ன புண்ணிய பாவத்தைப் பண்ணிற்று? ஆகையால் எல்லாருக்கும் சுகதுக்கங்கள் ஸ்வபாவமே யென்னில்.

இதற்கு உத்தரம்.

தன்னியல் பொழியப் பூவுந் தழலும் வந்தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையினானும்
உன்னிய இன்பத் துன்ப முறும் உயிர் உணர்விலாத
துன்னிய அசித்தை இன்பத் துன்பங்கள் சூழ்ந்திடாவே. 96

(**உரை**) தன்னியல்பு ஒழியப் பூவும் தழலும் வந்தணைய நீரில் மன்னியது இரண்டு செய்தி - நீருக்குத் தனக்கு இயல்பான குளிர்ச்சி நீங்கப் பூவும் நெருப்பும் பொருந்தியிட மணமும் வெம்மையும் பொருந்திற்று, அப்படியே; வரும் இரு வினையினானும் உன்னிய வினைப்பயன்கள் - புண்ணிய பாவங்களென்று சொல்லப்பட்ட இரண்டு தொழிலினாலும் சுகதுக்கங்களாகிய கரும பலமான துவரும் : உறும் உயிர் - அந்தச் சுகதுக்கங்களை ஆன்மாவானது பொருந்தும் : உணர்விலாத துன்னிய அசத்தை இன்பத் துன்பங்கள் சூழ்ந்திடாவே அறிவில்லாததாகிய ஆன்மாவிற்குப் போகாயத்னமாயிருக்கிற தேகத்தைச் சுகதுக்கங்கள் பொருந்தா, நீரிற் பொருந்தின உஷ்ணமும் நீருக்கின்றி அந்த நீரை † ஸ்வீகரிக்கிற பேர்க்கு ஆனது போல தேகத்தில் பொருந்தின சுகதிக்கங்கள் தேகிக்கல்லது, தேகத்துக் கில்லை. [† ஸ்வீகரித்தல் - அங்கீகரித்தல்.]

மேற்சங்கை.

இம்மையின் முயற்சி யாலே இருநிதி ஈட்டி இன்பம்
இம்மையே நுகர்வர் செய்தி யிலாதவர் பொருளு மின்றி
இம்மையே இடரு ழப்பர் வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி எய்திட வேண்டும் இங்கே. 97

(**உரை**) இந்தத் தேகத்தினுடைய உற்சாகத்தினாலே வெகுவான திரவியத்தைத் தேடி, அதனாலே இந்தத் தேகத்திலே தானே சுகத்தையும் அனுபவிப்பார்கள். உற்சாக மில்லாதவர்களுக்குப் பொருளுமில்லாமல் இங்கே தானே துக்கத்தை அனுபவிப்பார்கள். இந்த உற்சாகம் மடிமை யென்கிற இரண்டல்லாமல் வேறே புண்ணிய பாவங்களென்றிரண்டும் உண்டாமாகில், உற்சாகமன்றியிலே இப்பொழுது இவ்விடத்து உண்டாக வேண்டும்.

இதற்கு உத்தரம்.

இருவினைச் செயல்காண் இம்மை இரும்பொருள் இன்பம் வேண்டி
வருவினை செய்யுங் காலை மடிவரும் மடியு மின்றித்
தருவினை யதனில் அத்தந் தானறும் துயரந் தங்கும்
ஒருவினை செய்யா தோரும் உடையர் இவ் வுலகத் துள்ளே. 98

(**உரை**) இருவினைச் செயல்காண் - சுகதுக்கங்கள் வருவ தெல்லாம் புண்ணிய பாவங்களுடைய தொழிலினாலல்லது இம் முயற்சியால் வாராது காண், அஃதெவ்வாறென்னில்; இம்மை இரும்பொருள் இன்பம் வேண்டி வருவினை செய்யுங்காலை மடிவரும் மடியும் இன்றித் தருவினை யதனில் அத்தந்தானறும் துயரந் தங்கும். இம்மையிலே அதிகமான பொருளைத் தேடிச் சுகத்தையனுபவிக்க வேண்டிப் பொருள் வரும் முயற்சியைச் செய்யுங்காலத்து, மடிமை வரும். மடிமையைத் தவிர்ந்து உற்சாகத்தைப் பண்ணிலும் அதனாற பொருளுமில்லாமற் போனாலும்போம். பொருளில்லாததன்றி, அபாயம் வரினும் வரும்; ஒருவினை செய்யாதோரும் உடையர் இவ் வுலகத்துள்ளே - பிராரத்தமல்லது வாராதென்னும் முறைமையையறிந்த பெரியோர் † அயாசித விரதமாகப் பூமியின் கண்ணேயிருக்கவும் அவர்களுக்குச் சீவனம் நடக்கவும் கண்டோம்.
[† ஆயாசித விரதம் - இரத்தல் கூடாது என்ற விரதம்.]

மேலும்:

பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி அனுபவத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ இனிச்செய் கன்ம மேலுடற் சேரும் அன்றே. 99

(**உரை**) பேறு - ஒன்றுண்டாகிறது; இழவு - போகிறது : இன்பம் - சுகம்; பிணி - துக்கம்; (ஒடு - இடைச்சொல்) மூப்பு - நரைதிரை; சாக்காடு - மரணம்; என்னும்

ஆறும் முன் கருவுட்பட்டது - இப்படிச் சொல்லப்பட்ட ஆறும் கருவிற் பதிகிறபொழுதே முன் செய்த கருமத்தில் பக்குவமானவை பிராரத்தமாகப் பொருந்தப்பட்டது; அவ்விதி அனுபவத்தால் ஏறிடும் - அந்தப் பிராரத்தத்தினுடைய சுக துக்கானுபவத்தினாலே ஆகாமியம் ஏறிடும் : முன்ப செய்த கன்மம் இங்கு இதனுக்கேது - பூர்வத்திலே செய்த கருமம்கள் இந்தத் தேகத்திலே அனுபவிக்கிற சுகதுக்கங்களுக்கேது : இனிச்செய் கன்மம் மேலுடற் சேரும் அன்றே - இந்தத் தேகத்திலே செய்கிற புண்ணிய பாவங்களினாலே மேல் தேகாதிகளைப் பொருந்து மென்று தெளிவாயாக.

உடற்செயல் கன்மம் இந்த உடல்வந்த வாறென் என்னில்த்தி
விடப்படு முன்னு டம்பின் வினையிந்த உடல்வி ளைக்குந்
தொடர்ச்சியால் ஒன்றுக் கொன்று தொன்று தொட்டனாதி வி
னிடத்தினின் மரம்ம ரத்தின் வித்தும் வந்தியையு மாபோல். 100

(**உரை**) உடற்செயல் கன்மம் இந்த உடல் வந்தவாறு என் என்னில் - உடலினாலே புண்ணிய பாவங்கள் செய்யப்பட்டன. இந்த உடல் புண்ணிய பாவங்களினாலே வந்ததென்னில், ‡ அன்யோன்னி யாசிரயமாயிற்று. ஆகையால், தேகேந்திரியாதி உற்பத்திக்குக் காரணமேதென்னில்; விடப்படும் முன்னுடம்பின் வினை இந்த உடல் விளைக்குந் தொடர்ச்சியால் ஒன்றுக்கொன்று தொன்றுதொட்டு அனாதி -முன் தினவிடப்பட்ட தேகத்தினாலே பண்ணின கருமம் இந்த உடலுண்டாக்கும். இப்படியே தொன்று தொட்டு ஒன்றுக்கொன்று § துவந்தமாய்ப் பிரவாகானாதியாயுடையது. எவ்வாறென்னில்; வித்தினிடத்தினின் மரம் மரத்தின் வித்தும் வந்து இயையுமாபோல் - ஒரு பீசமானதிலே ஒரு விருட்சமுண்டாகி, அந்த விருட்சத்திலே அனேக விருட்சங் காரணமாக அனேக பீசங்களண்டாம். அவ் வாறு கருமமானது, பிரவாகானாதியாய் மும்மலத்தொன்றாய் புண்ணிய பாவ சொரூபமாய் அத்துவநிஷ்டமாய் இருவினைகளுக்குக காரணமாயிருத்தலால், இவ்வாறு தேகங்களும் கருமங்களும் உண்டாம். அன்னியோன்னியாசிரய தோஷமில்லை.

[‡ அன்னி யோன்னியாசிரயம் - தன்னையறிய அதனறிவையும் அதையறியத் தன்னறிவையும் அபேட்சிக்கிறதென்னும் ஒரு குற்றம்.
§ துவந்தம் - இரண்டு]

முற்செயல் விதியை இந்த முயற்சியோ டனுப வித்தால்
இச்செயல் பலிக்கு மாறென் இகமகி தங்கள் முன்னர்
அச்செய லானால் இங்கும் அவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப தின்றுபின் தொடருஞ் செய்தி. 101

(**உரை**) முற்செயல் விதியை இந்த முயற்சியோடு அனுபவித்தால் இச்செயல் பலிக்குமாறு என் - பூர்வத்திற் செய்த புண்ணிய பாவங்களை இந்தத் தேகத்தில் யத்தனத்தினாலே புசிக்கிறதேயானால், இதனால் மேல் கருமமேறும்படி எப்படி

என்னில்; இதமகி தங்கள் விருப்பு வெறுப்பாம்; முன்னர் அச்செயலானால் - பூர்வத்திலும் புசிக்கையில் விருப்பு வெறுப்பால் ஆகாமியம் ஏறுகையால்; இங்கும் அவை செயின் மேலைக்காகும் - இவ்விடத்தும் அந்த விருப்பு வெறுப்பைப் பண்ணினால் மேல் சனனத்துக்கு ஏதுவாம் : பிற்செயாது அனுபவிப்பதின்று - சிவானுக்கிரகத்தினாலே ராகத்துவேஷம் † நிருமுத்தனுக்கொழிய, ஆகாமியம் ஏறாதபடி புசிக்கிற துகூடாது. ஆகையால் ஆகாமியம் பொருந்த அனுபவிப்பதில்லாமையால்; பின்தொடரும் செய்தி - செய்யப்பட்ட தொழிலானது புண்ணியபாவங்களால் சன்ம தொடர்ச்சியாய் வரும்.

[† நிறுமுத்தன் - விடுபட்டவன்]

சித்தாந்தம் - 1942 ஹ -
ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், மீ